ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

48 T

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

# දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය
# தமிழ் இலக்கிய நயம்
# Appreciation of Tamil Literary Texts

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

* பகுதி I இல் 1, 2 ஆகிய **இரு** வினாக்களுக்கும் பகுதி II இல் 3ஆம் வினாவுக்கும் பகுதி III இல் 4, 5, 6, 7 ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கும் (எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு) விடை தருக.

## பகுதி I

1. (i) தொடக்கம் (x) வரையுள்ள வினாக்களுக்கு சுருக்கமான விடை எழுதுக.

(i) "கேட்டதைக் கொடுத்தேன், மேலும் கேளுங்கள் கொடுப்பேன், என்ன ?" - இக்கூற்று யாரால், யாருக்குக் கூறப்பட்டது ?

(ii) "ஆறுமுகநாவலருக்கு சமயம் உயிர்; மொழி உடல்" எனக் கூறுவதனூடாகக் கட்டுரையாசிரியர் உணர்த்த முற்படுவது யாது ?

(iii) "ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்" எனும் மணிமேகலை அடியின் பொருள் யாது ?

(iv) "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்..." - இங்கு அவன், நம் எனும் பதங்களால் சுட்டப்பெறுபவர்கள் யாவர் ?

(v) 'தமிழ்' எனும் கவிதையில் தமிழ்மொழி வளர்ச்சிக்கான பணிகளாகக் கவிஞரால் சுட்டப்பெறும் விடயங்கள் **இரண்டினைத்** தருக.

(vi) "பிண்ணாக்கு முண்டாம்" எனும் தொடரை, காளமேகப் புலவர் இருபொருள்பட எவ்வாறு கையாண்டுள்ளார் ?

(vii) 'நாட்டார் பாடல்களில் அழகியல் அம்சங்கள்' எனும் கட்டுரையை அடிப்படையாகக் கொண்டு, நாட்டிலக்கியத்திற்கும் ஏட்டிலக்கியத்திற்குமான வேறுபாடுகள் **இரண்டைத்** தருக.

(viii) "புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்"

(அ) இவ்வடிகளில் உணர்த்தப்படும் விடயம் யாது ?

(ஆ) அது எவ்வாறு உணர்த்தப்பட்டுள்ளது ?

(ix) 'நோக்கியும் நோக்காதும் போல்' எனும் கட்டுரையில், இஸ்லாமியப் புலவர் காதலைப் பாடும்போது எதிர்கொள்ளும் சவாலாகக் கூறப்படுவது யாது ?

(x) "தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய்"

(அ) 'தென்னிலங்கைக் கோன்' யார் ?

(ஆ) இங்கு 'சிந்துதல்' என்பதன் பொருள் யாது ?

(2 × 10 = 20 புள்ளிகள்)

2. பின்வரும் செய்யுள்களினதும் உரைப்பகுதிகளினதும் பொருளை உமது மொழிநடையில் எழுதி, தடித்த எழுத்துகளிலுள்ள தொடர்களின் சிறப்புகளை விளக்குக.

(i) காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ - நாதம்
அளிக்கின்ற **ஆழிவாய் ஆங்கலவ ஓடி**
**ஒளிக்கின்ற தென்னோ** உரை

(ii) களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் **வைகல்**
**எண்டேர் செய்யுந் தச்சன்**
**திங்கள் வலித்த காலன் னோனே**

[பக். 2 ஐப் பார்க்க

(iii) உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்
**வெள்ளத்தின் பெருக்கைப்போற் கலைப்பெருக்கும்**
**கவிப்பெருக்கும் மேவுமாயின்**
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்

(iv) சித்திர வனப்பு வாய்ந்த அச்செம்மல், பிராட்டியாலிடப்பட்ட முத்தணி நிரைத்த பீடத்தில் அமர்கின்றனர். அவ்வேளை பெருமானாரின் பேரொளி பரப்பிப் பொங்கிப் பெருகிய அழகு வெள்ளத்தில் **பிராட்டியின் கூருடைக் கரியவாட் கண்களாகிய கயல்கள் நீந்திக் குளிக்கின்றன.** அப்பொழுது நங்கை நல்லாள் மனமெனு மத்த யானையின் நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போகாதவாறு தம்மைத் தாமே காக்கின்றார். நாணெனும் போர்வை போர்த்துக் கற்பெனும் வேலி கோலித் தமது அவாவினைக் காத்தார்.

(v) "உன்னாலே என் உசிரெத்தானே எடுத்துக்கிட்டுப் போவமுடியும் ? இந்த உடலைக்கூட தூக்கிட்டுப்போவ உனக்குத் தெறமை இருக்கா ? யோசிச்சுப் பாரு. ஒண்ணெ வேறயா மாத்த முடியுமா ? அடியோட இல்லாமே ஆக்க முடியுமா ? அதெ உன்னைப் படைச்ச கடவுளாலேயே செய்ய முடியாதே! அப்புறமில்ல உனக்கு ? **பழசுன்னா அவ்வளவு கிள்ளுக் கீரேன்னா நெனச்சே ?**" என்று பொக்கை வாயைத் திறந்து காட்டிச் சிரித்தாள் கிழவி.

(5 × 5 = 25 புள்ளிகள்)

## பகுதி II

**3.** கீழ்க்காணும் பாடற்பகுதியை **அல்லது** உரைப்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

மதியை மதித்தவன்
வானத்தில் ஏறி
மதியை மிதித்து வந்தான் - தலை
விதியை நம்பி
விழுந்தவனே! நீ
விழுந்தே கிடக்கின்றாய்

வெற்றி எழுத்தாய்
வியர்வையைக் கொண்டவன்
விதியை எழுதுகிறான் - பொய்
நெற்றி எழுத்தை
நம்பியவன் நீ
நீரில் எழுத்தானாய்

கைகளில் தான் உன்
வருங்காலம் அது
கைகளின் சக்தியிலே - வெறும்
பொய்களின் வழியில்
போனவனே! அதை
ரேகையில் தேடுகிறாய்

கோளும் நாளும்
குறித்தது ராமன்
கொற்றவன் ஆவதற்கு - அந்த
நாளில் என்ன
நடந்தது ? பாவம்
நடந்தான் காட்டுக்கு

[பக். 3 ஐப் பார்க்க

காலம் பார்த்து
நடந்தது தானே
கண்ணகி கல்யாணம் - அவள்
கோலம் இழந்து
கொண்டதுவோ மலர்க்
குங்கும அலங்கோலம்

(i) (அ) இக்கவிதையின் மையக்கருத்து யாது ?

(ஆ) 'கோளுரை' என்ற தலைப்பின் பொருத்தப்பாட்டினை விளக்குக.

(ii) (அ) இக்கவிதையில் கவிஞர் யாரைக் கண்டிக்கிறார் ?

(ஆ) இங்கு கண்டனம் வெளிப்படும் தொடர்களைத் தருக.

(iii) கவிதையில் பாராட்டப்பெறும் விடயங்கள் யாவை ?

(iv) "மதியை மதித்தவன்
வானத்தில் ஏறி
மதியை மிதித்து வந்தான்"

(அ) இங்கு 'மதி' என்பது எவ்வெப் பொருள்களில் கையாளப்பட்டுள்ளது ?

(ஆ) இக்கூற்றின் மூலம் உணர்த்தப்படும் வரலாற்றுச் சம்பவம் யாது ?

(v) (அ) இக்கவிதையில் இடம்பெற்றுள்ள காவியக் கதாபாத்திரங்கள் எவை ?

(ஆ) கவிஞர் தன் கருத்தை வலியுறுத்த, அவ்வப்பாத்திரங்களோடு தொடர்புபட்ட சம்பவங்களை எவ்வாறு பொருத்தமுறக் கையாண்டுள்ளார் ?

**அல்லது**

கீழ்க்காணும் உரைப்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

படலையைத் திறந்து வெளியே வந்ததும் முகத்தில் வாடைக் கடுவல் ஊசி குத்துவதைப் போலச் சுளீர் சுளீர் என்று அடித்தது. எனக்கு உடம்பெல்லாம் நடுக்கமெடுத்தது. மேல் துண்டை முகத்தை வளைத்துக் கட்டிக் கொண்டு முன்னால் விறுவிறு என்று நடந்தேன். தூரத்தே குடிசைக்குள் இருந்த அகல் விளக்குகள் இருளைக் குத்துகுத்தென்று குத்தின.

ஓடைக் கரையை அடைந்தபோது, ஆறு, பரமார்த்த குருவின் சீடர்கள் கண்ட ஆற்றைப் போலத் தூங்கிக் கொண்டிருந்தது. கண்டல் இலைகள் பொட்டுப் பொட்டு என்று விழுந்து ஆற்றில் எங்கே போகிறோம் என்ற பிரக்ஞையே அற்ற வண்ணம் போய்க் கொண்டிருந்தன. கோரைப் புற்களின் மேலே சிலந்தி வலைபோலப் பனிப்படலம் மொய்த்துக் கிடந்தது.

அப்பா கரையில் இருந்த தோணியை ஓடையிலே தள்ளினார். அதற்குள்ளே சோற்றுப் பானையையும் சாமான்களையும் வைத்தார். உடனே தோணியை ஆற்றிலே விட்டுவிட்டுக் கோரைப் புற்களின் அடியில் 'அத்தாங்கை' வீசி இறால் பிடிக்கத் தொடங்கினார். நான் வெடுவெடுக்கும் குளிரில் வள்ளத்தின் முன்னணியத்தில் ஒடுங்கிப் போய் குந்திக்கொண்டிருந்தேன். கிழக்கே, கூரையில் தொங்கும் புலிமுகச் சிலந்தியைப் போல, வானத்திலே விடிவெள்ளி நடுங்கிக் கொண்டிருந்தது. இன்னமும் கீழே கிழக்கு வெளுக்கத் தொடங்கியது.

(i) இவ்வுரைப்பகுதியில் இடம்பெற்றுள்ள உவமைகளுள் எவையேனும் **இரண்டினை** இனங்கண்டு, விளக்குக.

(ii) குளிரின் மிகுதி எவ்வாறு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது ?

(iii) "தூரத்தே குடிசைக்குள் இருந்த அகல் விளக்குகள் இருளைக் குத்துகுத்தென்று குத்தின" என்னும் கூற்றில் நீர் காணும் நயத்தினை விளக்குக.

(iv) ஆற்றின் அமைதி எவ்வாறு வெளிப்படுத்தப்பட்டுள்ளது ?

(v) பின்வரும் சொற்களின் பொருளைத் தருக.

(அ) பிரக்ஞை

(ஆ) வாடைக் கடுவல்

(5 × 5 = 25 புள்ளிகள்)

[பக். 4 ஐப் பார்க்க

## பகுதி III

- எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடை எழுதுக.

**4.** திருக்குறள் - **நட்பு** என்னும் அதிகாரத்தில்,

(i) நிறைநீர நீரவர்...

(ii) நவில் தொறும்...

(iii) உடுக்கை இழந்தவன்...

ஆகிய குறட்பாக்களின் பொருளை விளக்கி, அக் குறட்பாக்களில் வள்ளுவர் கையாண்டுள்ள உவமைகளின் சிறப்பை எடுத்துரைக்குக.

**5.** கம்பராமாயணம் - **கையடைப் படலத்தில்,** தசரதனது

(i) பெருமை

(ii) பணிவு

என்பன வெளிப்படுத்தப்படுமாற்றினை விளக்குக.

**6.** **நம்பிக்கை** என்னும் கட்டுரையில்,

(i) நல்லொழுக்கம் நன்மையைத் தரும்

(ii) தீயொழுக்கம் துன்பத்தைத் தரும்

என்னும் கருத்துகள் வலியுறுத்தப்படுமாற்றினை விளக்குக.

**7.** **சிங்களத்து மருத்துவிச்சி** என்னும் சிறுகதையில்,

(i) அலிஸ் நோனா

(ii) டாக்டர்

ஆகிய பாத்திரங்கள் படைக்கப்பட்டிருக்குமாற்றினை விளக்குக.

(15 × 2 = 30 புள்ளிகள்)

* * *